# தன்யாஷ்டகம்

(தன்யன் - அதாவது நிரந்தரச் செல்வத்தைப் பெற்ற பாக்யசாலி - யார் என்பது பற்றிய எட்டுச் சுலோகங்கள் கொண்டது.)

**தத் ஜ்ஞானம் ப்ரசமகரம் யதி3ந்த்3ரியாணாம்**
**தத் ஜ்ஞேயம் யது3பநிஷத்ஸு நிச்சிதார்த2ம்**
**தே த4ந்யா பு4வி பரமார்த2நிச்சிதேஹா:**
**சேஷாஸ்து ப4ரம நிலயே பரிப்4ரமந்தி ||** 1

எது புலன்களின் ஆழ்ந்த அடக்கத்தைக் கொடுக்கிறதோ அதுவே ஞானம். எது வேதாந்தங்களில் (இறுதி ஸத்யமாகித்) தீர்மானிக்கப்பட்ட பொருளோ அதுவே அறியத் தகுந்தது. பூமியில் (எவர்கள்) உயர்ந்த ஸத்யப் பொருளில் உறுதியான முயற்சி உள்ளவர்களோ, அவர்களே தன்யர்கள். மற்றவர்களோ வெனில் ப்ராந்தியைத் தரும் இடத்தில் சுற்றிற்சுற்றித் திரிபவரே.

**ஆதௌ3 விஜித்ய விஷயான் மத3மோஹராக3**
**த்3வேஷாதி3 சத்ரு - க3ணமாஹ்ருத - யோக3 - ராஜ்யா: |**
**ஜ்ஞாத்வா மதம் ஸமனுபூ4ய பராத்மவித்3யா -**
**காந்தா ஸுக2ம் வனக்3ஹே விசரந்தி த4ன்யா: ||** 2

முதலில் சப்தம் (ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம்) முதலான விஷயங்களையும் கர்வம், அவிவேகம், ஆசை, வெறுப்பு முதலான எதிரிக்கூட்டத்தையும் ஜயித்து, (மனோநிக்ரஹம் என்ற) யோக ராஜ்யத்தை ஸ்வாதீனம் செய்துகொண்டு, (உபநிஷத்) ஸித்தாந்தத்தை அறிந்து, பரமாத்ம ஞானம் என்ற பத்னியிடமிருந்து கிடைக்கும் சுகத்தை நன்கு அநுபவிக்கும் தன்யர்கள், காடு எனும் கிருஹத்தில் ஸஞ்சரிக்கின்றனர். (ஸந்நியாஸாச்ரமத்தையே ஒரு க்ருஹஸ்தாச்ரமமாக வர்ணிக்கிறார்.)

**த்யக்த்வா க்3ருஹே ரதிமதோ4க3தி ஹேதுபூ4தாம்**
**ஆத்மேச்ச2யோபநிஷத3ர்த2ரஸம் பிப3ந்த: |**
**வீத ஸ்ப்ருஹா விஷய போ4க3பதே3 விரக்தா:**
**த4ந்யாச்சரந்தி விஜநேஷு விமுக்தஸங்கா3: ||** 3

தாழ்ந்த நிலையை அடைவதற்குக் காரணமாக உள்ள வீட்டில் ஆசையை விட்டுவிட்டு, ஆத்மஸ்வரூபத்தை அறிவதில் ஆசையால், உபநிஷத்துக்களில் கூறப்பட்ட பொருளின் ரஸத்தைப் பானம் செய்து கொண்டு, விஷயங்களை அநுபவிக்கும் நிலையில் பற்று நீங்கியவர்களாய், வைராக்யமுள்ளவர்களாக தன்யர்கள் ஜன ஸஞ்சாரம் இல்லாத இடத்தில் பற்றற்றவர்களாய் ஸஞ்சாரம் செய்கின்றனர்.

**த்யக்த்வா மமாஹமிதி ப³ந்த⁴கரே பதே³ த்³வே**
**மாநாவமான ஸத்³ருசா: ஸமத³ர்சிநச்ச ।**
**கர்தாரமந்யமவக³ம்ய தத³ர்பிதானி**
**குர்வந்தி கர்ம பரிபாக ப²லானி த⁴ன்யா: ॥** 4

பந்தத்தை உண்டுபண்ணுகிற 'என்னுடைய' 'நான்' என்ற இரண்டு நிலைகளையும் விட்டு மதிப்பு, அவமதிப்பு இரண்டிலும் ஸமமாக இருப்பவர்களும், யாவற்றையும் சமமான ப்ரஹ்மமாகப் பார்ப்பவர்களுமான தன்யர்கள், சிருஷ்டி செய்கின்றவரும் (பிரபஞ்சத்தைக் காட்டிலும்) வேறாக இருக்கிறவருமான வரை (ஈசனை) அறிந்து கர்மா பழுத்து ஏற்படும் பயன்களை அவரிடமே ஸமர்ப்பணம் செய்கிறார்கள்.

**த்யக்த்வைஷணா - த்ரய - மவேக்ஷித - மோக்ஷ மார்கா³:**
**பை⁴க்ஷாம்ருதேன பரிகல்பித - தே³ஹ - யாத்ரா: ।**
**ஜ்யோதி: பராத் - பரதரம் பரமாத்ம ஸம்ஜ்ஞ ம்**
**த⁴ன்யா த்³விஜா ரஹஸி ஹ்ருத்யவலோகயந்தி ॥** 5

மூன்று பற்றுக்களையும், (தாரைஷணா (மனைவியிடம் பற்று) புத்ரைஷணா (மக்களிடம் பற்று) வித்தைஷணா (பணத்தில் பற்று விட்டு, மோக்ஷம் அடையும் வழியைக்கண்டவர்களான, பிக்ஷை எடுப்பதில் கிடைக்கும் அமிருதத் திற்கொப்பான அன்னத்தால், தேஹ ஜீவனத்தை நடத்துகின்றவர்களாய், தன்யர்களான இரு பிறப்பாளர்கள், ரஹஸ்யத்தில், ஹிரு தயத்தில், சிற நத வற்றைக் காட்டிலும் மிகச்சிறந்த தான, பரமாத்மா என்று பெயருள்ள பிரகாசத் தைப் பார்க்கிறார்கள்.

**நாஸத் ந ஸத் ந ஸதஸத் ந மஹத் ந சாணு**
**ந ஸ்த்ரீ புமான் ந ச நபும்ஸகமேகபீ³ஜம் ।**
**யைர் ப்³ரஹ்ம தத்ஸம - முபாஸித - மேகசித்தைர்**
**த⁴ன்யா விரேஜுரிதரே ப⁴வபாச ப³த்³தா⁴: ॥** 6

ப்ரஹ்மம் அஸத்து (இல்லாதது) இல்லை. ஸத்து (இருப்பது) இல்லை ஸததாகவும், அஸத்தாகவும் கலந்து இல்லை. பெரியதுமில்லை; சிறியதுமில்லை. பெண் அல்ல; ஆணும் அல்ல; அலியும் அல்ல. ஒரே காரணப்பொருளும் அனத்துக்கும் பொதுவானதுமான அந்த (ப்ரஹ்மம்) ஒன்றிலேயே மனம் நிலைத் துள்ள எவர்களால் த்யானம் செய்யப்படுகிறதோ (அவர்கள்) பாக்யசாலிகளாக விளங்குகிறார்கள். மற்றவர்கள் பிறப்பு (இறப்பு) என்ற பாசத்தால் கட்டப் பட்டவர்கள்.

**அஜ்ஞான - பங்க - பரிமக்³நமபேத - ஸாரம்**
**து: கா²லயம் மரண - ஜன்ம - ஜராவஸக்தம்**
**ஸம்ஸார - ப³ந்த⁴ன - மநித்யமவேக்ஷ்ய த⁴ன்யா:**
**ஜ்ஞானாஸிநா தத³வசீர்ய விநிச்சயந்தி ॥** 7

அஞ்ஞானம் என்ற சேற்றில் அமிழ்ந்தியதும், ஸாரமற்றதும், துக்கங்களுக்கு இருப்பிடமும், இறப்பு - பிறப்பு - மூப்பு இவைகளுடன் கூடியதும், அழியக்

கூடியதுமான ஸம்ஸாரமென்ற பந்தத்தை ஆராய்ந்து தன்யர்கள் ஞானம் என்ற கத்தியால் அதை சிதற அடித்து (அறுத்து) (ப்ரஹ்மத்தில்) உறுதி பெறுகிறார்கள்.

**சாந்தைரநந்ய மதிபி⁴ர் மது⁴ர ஸ்வபா⁴வை:**
**ஏகத்வ நிச்சித மநோபி⁴ரபேத மோஹை: |**
**ஸாகம் வநேஷ விதி³தாத்ம பக³ஸ்வரூபை:**
**தத்³வஸ்து ஸம்யக³நிசம் விம்ருசந்தி த⁴ன்யா: || 8**

சாந்தர்களும்; (மனத்தை அடக்கினவர்களும்) வேறு ஒன்றிலும் மனதைச் செலுத்தாதவர்களும், இனிமையான ஸ்வபாவம் உள்ளவர்களும், ஒரே தத்வத்தில் உறுதி கொண்ட மனம் உள்ளவர்களும், மோஹம் விலகியவர்களும், ஆத்ம நிலையின் ஸ்வரூபத்தை அறிந்தவர்களோடு (மஹான்களோடு) கூடக் காடுகளில் தன்யர்கள் (ப்ரஹ்மமான) அந்த வஸ்துவை எப்பொழுதும் விசாரம் செய்கின்றனர்.

